வேறு.

கமருறுபொருப்பின்வாழும்விஞ்சையர்காணவந்தார்
தமரையுமறியார்நின்றுதிகைப்புறுதகமைசான்ற
குமரருமங்கைமாருங்குழுவலால்வழுவிவிண்ணின்
றமரர்நாடிழிந்ததென்னப்பொலிந்ததவ்வனிகவெள்ளம். (உஅ)

வெயினிறங்குறையச்சோதிமின்னிழல்பரப்பமுன்னாள்
துயிலுணர்செவ்வியோருர் * துனியுறுமுனிவிரேரும்
குயிலொடுமினிதுபேசிச்சிலம்பொடுமினிதுகூவி
மயிலினந்திரிவவென்னத்திரிந்தனர்மகளிரெல்லாம். (உகூ)

தாளிணைகழல்களார்ப்பத்தாரிடையளிகளார்ப்ப
வாள்புடையிலங்கச்செங்கேழ்மணியணிவலயமின்னத்
தோளெனவுயர்ந்தகுன்றின்சூழல்களினிதுநோக்கி
வாளரிதிரிவவென்னத்திரிந்தனர்மைந்தரெல்லாம். (ங0)

சுற்றியகடல்களெல்லாஞ்சுடர்மணிக்கனகக்குன்றைப்
பற்றியவளைந்தவென்னப்பரந்துவந்திறுத்தசேனை
கொற்றவர்தேவிமார்கண்மைந்தர்கள்கொம்பனார்வந்
துற்றவர்காணவுற்றமலைநிலையுரைத்துமன்றே. (ஙக)

பம்புதேன்மிஞிறுதும்பிபரந்திசைபாடியாட
உம்பர்வானகத்துநின்றவொளிவளர்தருவினேங்கும்
கொம்புகள்பணைக்கைநீட்டிக்குழையொடுமொடித்துக்கோட்டுத்
தும்பிகளுயிரேயன்னதுணைமடப்பிடிக்குநல்கும். (ஙஉ)

பண்மலர்பவளச்செவ்வாய்ப்பனிமலர்குவளையன்ன
கண்மலர்க்கொடிச்சிமார்க்குக்கணித்தொழில்புரியும் † வேங்கை
உண்மலர்வெறுத்ததும்பிபுதியதேனுதவுநாகத்
தண்மலரென்றுவானத்தாரகைதாவுமன்றே. (ஙங)

மீனெனும்பிடிகளோடும்விளங்கும்வெண்மதிநல்வேழம்
கூனல்வான்கோடுநீட்டிக்குத்திடக்குமுறிப்பாயும்
தேனுகுமடையைமாற்றிச்செந்தினைக்குறவர்முந்தி
வானநீராறுபாய்ச்சியைவனம்வளர்ப்பர்மாதோ. (ஙச)

குப்புறற்கருமையாலக்குலவரைச்சாரல்வைகி
ஒப்புறத்துளங்குகின்றவுடுபதியாடியின்கண்
இப்புறத்தேயுங்காண்பார்குறத்தியரியைந்தகோலம்
அப்புறத்தேயுங்காண்பாரரம்பையரழகுமாதோ. (ஙரு)

---

* துனி-கலவிக்காலத்து ஆடவர்பாற்குற்றங்காரணமாக மாதவரிடத்துண்டாவதோர் சிறுபிணக்கு. † தினைக்குரல்கொய்தற்கு வேங்கை மலர்தல் காலமாதலின் கணித்தொழில்புரியும் வேங்கை என்றார்.

உதிபுறதுருத்திபூதமுலையுறச்சுமக்காயின்
அதிவிடந்திறசெய்யுமுண்கிலாதாவியுண்ணும்
கொதிநுனைவேற்கண்மாதர்குறத்தியர்புதல்வினோடு
மதியினைவாங்கியொப்புக்காண்குவர்குரவர்மன்னோ. (௩௬)

பேணுதற்கரியசீயக்குருளையம்பிடிகளின்ற
காணுதற்கினியவேழக்கன்றொடுகளிக்குமன்றில்
கோணுதற்குரியதிங்கட்குழவியுங்குறவர்தங்கள்
வாணுதற்கொடிச்சிமாதர்மகவொடுதவழுமாதோ. (௩௭)

அஞ்சனக்கிரியினன்னவழிகவுள்யானைகொன்ற
வெஞ்சினத்தரியின்றிண்காற்சுவட்டொடுவிழைசேர்த்தர்
துஞ்சியர்தலத்துநீலக்குலமணித்தலத்துமாதர்
பஞ்சியங்கமலம்பூத்தபசுஞ்சுவடுடைத்துமன்னோ. (௩௮)

செங்கயலனையநாட்டஞ்செவியுறமுறுவலேன்று
பொங்கிருங்கூந்தல்சோராபுருவக்கணையரியாபூவின்
அங்கையுமிடறுங்கூட்டிநரம்பினைத்தமிர்தமூறும்
மங்கையர்பாடல்கேட்டுக்கின்னரமயங்குமாதோ. (௩௯)

கள்ளவிழ்கோதைமாதர்காலெதாடுமுறநடைசெய்யும்
கொள்ளைவாட்கண்ணிணார்தங்குக்குமக்குழம்புதங்கும்
தெள்ளியபளிக்குப்பாறைத்தெளிசுனையணியிற்றேய்த்த
வள்ளமுநறவுமென்னவரம்பிலபொலியுமன்றே. (௪௰)

ஆடவராவிசோரவஞ்சனவாரிசோர
ஊடலிற்சிவந்தநாட்டத்தும்பர்தம்மரம்பைமாதர்
தோடலர்கோதைநின்றுதிர்ந்த * மந்தாரமாலை
வாடலநறவறாதவயின்வயின்வயங்குமாதோ. (௪௧)

மாந்தளிரனையமேனிக்குறத்தியர்மாலைசூட்டிக்
கூந்தலின்கமுகின்பாளைகுழலினோடொப்புக்காண்பார்
ஏந்திழையரம்பைமாதரெரிமணிக்கடகம்வாங்கிக்
காந்தளம்போதிற்பெய்துகைகளோடொப்புக்காண்பார். (௪௨)

சரம்பயில்சாபமென்னப்புருவக்கடம்பினோடு
நரம்பினேறுடனிதுபாடிநாடகமயிலோடாட
அரம்பையர்வெறுத்துத்தத்தவிர்மணிக்கோவையாரம்
மரம்பயில்கடுவன்பூணமர்ந்திகண்டுவக்குமாதோ. (௪௩)

சாந்துசாய்தடங்கடோறுந் † தாதுராகத்திற்சார்ந்த
கூந்தலம்பிடிகளெல்லாங்குங்குமமணிந்தபோலும்

---

* மந்தாரம்-பஞ்சதருக்களிலொன்று.
† தாதுராகம்-காவிக்கல்.

காந்தினமணியின்சோதிக்கதிரொடுங்கலந்துமூசச்
சேந்துவானகமெப்போதுஞ்செக்கரையொக்குமாதோ. (௪௪)

நிலமகட்கணிகளென்னநிரைகதிர்முத்தஞ்சிந்தி
மலைமகள்கொழுநன்சென்னிவந்துவீழ்கங்கைமான
அலகில்பொன்னலம்பியாரஞ்சார்ந்துவீழருவிமாலை
உலகளந்தவன்றன்மார்பினுத்தரீயத்தையொத்த. (௪௫)

கோடிலாநாகப்போதொடிலவங்கமலருங்கூட்டிச்
சூடுவார்களிவண்டோச்சித்தாநறுந்தேறலுண்பார்
கேடிலாமகரயாழிற்கின்னரமிதுனம்பாடும்
பாடலாலூடனீங்கும்பரிமுகமாக்கள்கண்டார். (௪௬)

பெருங்களிறேயுமைந்தர்பேரெழிலாகத்தோடு
பொருந்துணைக்கொங்கையன்னபொருவில்கோங்கரும்பின்மாடே
மருங்கெனக்குழையுங்கொம்பின்மடப்பெடைவண்டுந்தங்கள்
கருங்குழற்களிக்கும்வண்டுங்கடிமணம்புணரக்கண்டார். (௪௭)

படிகத்தின்றலமென்றெண்ணிப்படர்சுனைமுழுகிப்புக்க
சுடிகைப்பூங்கமலமன்னசுடர்மதிமுகத்தினார்தம்
* வடகத்தோடுடுத்ததூசைமாசினீர்நனைப்பநோக்கிக்
கடகத்தையெறிந்துதம்மிற்கருங்கழல்வீரர்நக்கார். (௪௮)

பூவணைபலவுங்கண்டார்பொன்னரிமாலைகண்டார்
மேவருங்கோபமன்னவெள்ளிலைத்தம்பல்கண்டார்
ஆவியினினியகொண்கர்ப்பிறிந்தறிவழிந்தவிஞ்சைப்
பாவையர்வைகத்தீய்ந்தபல்லவசயனங்கண்டார். (௪௯)

† பானலங்கண்களாடப்பவளவாய்முறுவலாடப்
பீனவெம்முலையினிட்டபெருவிலையாரமாடத்
தேன்முரன்றளகத்தாடத்திருமணிக்குழைகளாட
வானவர்மகளிராடும்வாசநாறூசல்கண்டார். (௫0)

சுந்தரவானமாதர்துவரிதழ்ப்பவளவாயும்
அந்தமில்சுரும்புந்தேனுமிஞிறுமுண்டல்குல்விற்கும்
பைந்தொடிமகளிர்கைத்தோர்பசையில்லையென்னவிட்ட
மைந்தரினீத்ததீந்தேன்வள்ளங்கள்பலவுங்கண்டார். (௫௧)

அற்பகலாக்குஞ்சோதிப்பளிக்கறையமளிபாங்கர்
மற்பகமலர்ந்ததிண்டோள்வானவர்மணந்தகோலம்
விற்பகைநுதலினார்தங்கலவியின்வெறுத்துநீத்த
கற்பகமின்றமாலைகலனொடுங்கிடப்பக்கண்டார். (௫௨)

---

* வடகம்-மேற்போர்வை.

† பானல்-நீலோர்புலம்,

கையெனமலரவேண்டியரும்பியசார்த்தளேக்கிப்
பையரவிவையென்றஞ்சிப்படைக்கண்கள்புதைக்கின்ருரும்
செய்தவழ்வயிரப்பாறைசிழலிடைத்தோன்றம்போதைக்
கொய்திவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்ருரும். (௩௩)

பின்னங்களுகிரிற்செய்துபிண்டியந்தளிர்க்கைக்கொண்ட
சின்னங்கண்முலையினப்பித்தேமலர்கொய்கின்ருரும்
வன்னங்கள்பலவுந்தோன்ற * மணியொளிர்மலையினில்லா
அன்னங்கள்புகுந்தவென்னவசன்சனைகுடைகின்ருரும். (௩௪)

வேறு.

ஈனுமாழையினந்தளிரேயொளி
ஈனுமாழையினந்தளிரேயிடை
மானும்வேழமுநாகமுமாதர்தோள்
மானும்வேழமுநாகமுமாடெலாம். (௩௫)

திமிரமாவுடற்குங்குமச்சேதகம்
திமிரமாவொடுஞ்சந்தொடுந்தேய்க்குமால்
அமரமாதரையொத்தொளிரஞ்சொலார்
அமரமாதரையொத்ததவ்வானமே. (௩௬)

பேரவாவொடுமோசணம்பேரவே
பேரவாவொடுமோசணம்பேரவே
ஆரவாரத்திளேடுமருவியே
ஆரவாரத்திளேடுமருவியே (௩௭)

புகலும்வாளரிக்கண்ணியர்பொற்புயம்
புகலும்வாளரிக்கண்ணியர்பூண்முலை
அகிலுமாரமுமாரவங்கோங்குமே
அகிலுமாரமுமாரவங்கோங்குமே. (௩௮)

துன்னரம்பைநிரம்பியதொல்வரை
துன்னரம்பையருவிற்றேன்றமால்
கின்னரம்பயில்கீதங்களென்னலாம்
கின்னரம்பயில்கின்றனரேழையார். (௩௯)

ஊறுமாகடமாவுறவுங்கெலாம்
ஊறுமாகடமாமதமோடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே. (௪0)

* மணி-நவமணிகளையுங்கொள்க.

கல்வியங்குகருங்குறமங்கையர்
கல்வியங்ககழ்காமர்கிழங்கெடா
வல்லியங்கணெருங்குமருங்கெலாம்
வல்லியங்கணெருங்கிமயங்குமே. (சுக)

கோளிபங்கயமூழ்கக்குளிர்கயம்
கோளிபங்கயமூழ்கக்குலைந்தவால்
* ஆளிபொங்குமருவரையூடிழிந்
† தாளிபொங்குமரம்பையரோதியே. (சுஉ)

ஆகமாலயமாகவுளாள்பொலி
வாகமாலெனலாகியதம்மலை
மேகமாலையிடைந்தனமேலெலாம்
மேகமாலையிடைந்தனகீழெலாம். (சுரு)

பொங்குதேனுகர்பூமிஞிறுமென
எங்குமாதருமைந்தருமீண்டியத்
துங்கமால்வரைச்சூழல்கள்யாவையும்
தங்கிநீங்கலர்தாமினிதாடுவார். (சுச)

இறக்கமென்பதையெண்ணிலரெண்ணுங்கால்
பிறக்குமென்பதோர்பீழையதாதலால்
துறக்கமெய்தியதூயவரேயென
மறக்ககிற்றிலரன்னதன்மாண்பெலாம். (சுரு)

வேறு.

‡ மஞ்சார்மலைவாரணமொத்ததுவானிரேனும்
வெஞ்சாயையுடைக்கதிரங்கதன்மீதுபாயும்
§ பஞ்சானனமொத்ததுமற்றதுபாயவேறும்
செஞ்சோரியெனப்பொலிவுற்றதுசெக்கர்வானம். (சுசு)

திணியார்சினைமாமரம்யாவையுஞ்செக்கர்பாயத்
தணியாதநறுந்தளிர்தந்தனபோன்றுதாழ
அணியாரொளிவந்துநிரம்பலினங்கமெங்கும்
மணியாலியன்றம்மலையொத்ததம்மையில்குன்றம். (சுஎ)

கண்ணுக்கினிதாகிவிளங்கியகாட்சியாலும்
எண்ணற்கரிதாகியிலங்குசிரங்களாலும்

---

† ஆளி-வண்டுகள்.
* ஆளி-சிங்கம்.

‡ செக்கர்வானமுதலியன கூறிப்போந்தமையானும், வருவதுமாலைப்போதாகலானும் மஞ்சார்மலை என்பதற்கு அத்தகிரியெனப் பொருளுரைத்துக்கொள்க.

§ பஞ்சானனம்-விரிந்தமுகமுள்ளது.

வண்ணக்கொழுஞ் * சந்தனச்சேதகமார்பணிந்த
அண்ணற்கரியோன்றனையொத்ததக்காசிக்குன்றம். (சஅ)

ஊனும்முயிரும்மனையாரொருவர்க்கொருவர்
தேனும்மிஞிறுஞ்சிறுதும்பியும்பம்பியார்ப்ப
† ஆனையினமும்பிடியும்மகலாதியேறும்
மானுங்கலையும்மெனமால்வரைவந்திழிந்தார். (சகூ)

‡ கால்வானகத்தேருடைவெய்யவன்காட்கடுங்கட்
கோல்மாய்கதிர்ப்புல்லுழைக்கொல்சினக்கோளரிமா
மேல்பான்மலையிற்புகவீங்கிருள்வேறிருந்த
மால்யானைபிட்டமெனவந்துபரந்ததன்றே. (ரு0)

மந்தாரமுந்துமகரந்தமணங்குலாவும்
அந்தாரசர்க்கரசன்றனன்கவெள்ளம்
நந்தாதொலிக்குந்நரலைப்பெருவேலையெல்லாம்
செந்தாமரைபூத்தெனத்தீபமெடுத்ததன்றே. (ருக)

தண்ணக்கடலிற்றனிசேர்ந்துதரங்கந்ங்கி
விண்ணிற்சுடர்வெண்மதிவந்ததுமின்கள்சூழ
வண்ணக்கதிர்வெண்ணிலவின்றிரள்வானகத்தோ
டொண்ணித்திலமீன்றொளிர்வால்வளைபூர்வதொத்தே. (ருஉ)

மீனுறுவேலையொருவெண்மதியீனும்வேலை
§ நோனாததனையவலற்கருங்கோடிவெள்ளம்
வானாடியரிற்பொலிமாதர்முகங்களென்னும்
ஆனாமதியங்கண்மலர்ந்ததனிகவெள்ளம். (ருங)

மண்ணும்முழவின்னொலிமங்கையர்பாடலோதை
பண்ணுந்நரம்பிற்பகையாழியற் S பாணியோதை
கண்ணும்முடைவேயிசை ¶ கண்ணுளராடலோதை
விண்ணும்மருளும்படிவிம்மியெழுந்தவன்றே. (ருச)

மணியின்னணிநீக்கிவையக்கொளிமுத்தம்வாக்கி
அணியும்முலைபாகிலாவிபுலர்த்துநல்லார்
தணியும்மதுமல்லிகைத்தாமம்வெறுத்துவாசம்
திணியும்மிதழ்ப் ‖ பித்திகைக்கத்திகைசேர்த்துவாரும். (ருரு)

---

* சந்தனச்சேதகம்-சந்தனக்குழம்பு.
† ஆனையினமென்றது - பிடியெனப் பிற்கூறலாற் களிறெனக் கூறுக.
‡ கால்கண்டு-ஒற்றையுருளை.
§ நோனா-பொறாது.
S பாணியோதை-தாளவோசை.
¶ கண்ணுளர்-நாடகர். ‖ பித்திகைக்கத்திகை-கருமுகைமாலை.

புதுக்கொண்டவேழம்பிணிப்போர் * புனைபாடலோதை
மதுக்கொண்டமாந்தர்மடவாரின்மிழற்றுமோதை
பொதுப்பெண்டிரல்குற்புனைமேகலைப்பூசலோதை
கதக்கொண்டயானைகளியாற்களிக்கின்றவோதை. (எசு)

உண்ணுவமுதன்ன † கலைப்பொருளுள்ளதுண்டும்
பெண்ணாரமுதம்மனையார்மனத்தூடல்பேர்த்தும்
பண்ணனபாடல்செவிமாந்திப்பயன்கொளாடல்
கண்ணலினிதுய்க்கவுங்கங்குல்கழிந்ததன்றே. (எஎ)

கச-வது வரைக்காட்சிப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூ௦கூ.

---

## கரு-வது, பூக்கொய்படலம்.

மலர்பறிப்பதைக் குறித்துக்கூறும் படலம்.

மீனுடையெயிற்றுக்கங்குற் ‡ கனகனைவெகுண்டுவெய்ய
கானுடைக்கதிர்களென்னுமாயிரங்கரங்களோச்சித்
தானுடையுதயமென்னுந்தமணியத்தறியுணின்று
§ மானுடைமடங்கலென்னத்தோன்றினன்வயங்குவெய்யோன். (க)

முறையெலாமுடித்தபின்னர்மன்னனுமூரித்தேர்மேல்
இறையெலாம்வணங்கப்போனனெழுந்துடன்சேனைவெள்ளம்
குறையெல்லாஞ்சோலையாகிக்குழியெலாங்கழுநீராகித்
துறையெலாங்கமலமானசோனையாறடைந்ததன்றே. (உ)

அடைந்தவணிறுத்தபின்னரருக்கனும்பர்ச்சேர்ந்தான்
மடந்தையர்குழாங்களோடுமன்னருமைந்தர்தாமும்
குடைந்துவண்டுறையுமென்பூக்கொய்துநீராடமைதீர்
தடங்களுமடுவுஞ்சூழ்ந்ததண்ணறுஞ்சோலைசார்ந்தார். (ங)

திண்சிலைபுருவமாகச்சேயரிக்கருங்கணம்பால்
புண்சிலசெய்வரென்றுபோவனபோன்றமஞ்ஞை
பண்சிலம்பணிவாயார்ப்பபாணிறைப்பறந்தகிள்ளை
ஒண்சிலம்பார்ப்பமாதரொதுங்குதோறொதுங்குமன்னம். (ச)

* புனைபாடல்-யானைகளைத்தளைக்குங்காற் பாடும்பாட்டு. † கலைப்பொருளுள்ள துண்டுமென்றது - கலையின்றுணிந்தபொருளைச் செவியாகிய வாயால் நுகர்ந்துமெனக் கொள்க. கலைப்பொருள்-சாதியொருமை.
‡ கனகனென்றது-இரணியனை. § மானுடைமடங்கல்-நரமடங்கல்.

செம்பொன்செய்சுருளுந்தெய்வக்குழைகளுஞ்சேர்ந்துமின்னப்
பம்புதேனலம்பவொல்கிப்பண்ணையிளுடனேருங்கிக்
கொம்பொடுங்கொடியனாரைக்குறிப்பறிந்துணர்தநேற்றார்
வம்பவிழலங்கன்மாலைமைந்தருமயங்கினின்றார். (௫)

பாசிழைப்பரவையல்குற்பண்டருகிளவித்தண்டேன்
மூசியகூந்தன்மாதர்மொய்த்தபேரமலைகேட்டுக்
கூசினவல்லபேசநாணினகுயில்களெல்லாம்
* வாசகம்வல்லார்முன்னின்றியாவர்வாய்திறக்கவல்லார். (௬)

நஞ்சினுங்கொடியநாட்டமமுதினுநயந்துநோக்கிச்
செஞ்செவேகமலக்கையாற்றீண்டலு † நீண்டகொம்பர்
தஞ்சிலம்படியின்மென்பூச்சொரிந்துடன்றாழ்ந்ததென்றால்
வஞ்சிபோன்மருங்குலார்மாட்டியாவரேவணங்கிலாதார். (௭)

அம்புயத்தணங்கினன்னாரம்மலர்க்கைகடண்ட
வம்பியலலங்கற்பங்கி ‡ வாளரிமருளுங்கோளார்
தம்புயவரைகள்வந்துதாழ்வனதளிர்த்தமென்பூங்
கொம்புகடாமுமென்றல்கூறலார்தகமைத்தொன்றே. (௮)

§ நதியினுங்குளத்தும்பூவாளினங்கள்குவளையோடு
மதிநுதல்வல்லிபூப்பநோக்கியமாலைத்தும்பி
அதிசயமெய்திப்புக்குவீழ்ந்தனவலைக்கப்போகா
புதியனகண்டபோழ்துவிடுவரோபுதுமைபார்ப்பார். (௯)

§ உலந்தருவயிரத்திண்டோளொழுகிவாரொளிகொண்மேனி
மலர்ந்தபூந்தொடையன்மாலைமைந்தர்பான்மயிலினன்னார்
கலந்தவர்போலவொல்கியொசிந்தனசிலகைவாராப்
புலந்தவர்போலநின்றவுளசிலபூத்தகொம்பர். (௧0)

பூவெலாங்கொய்துகொள்ளப்பொலிவிலதுவனோக்கி
யாவையாங்கணவர்கண்ணுக்கழகிலவிவையென்றெண்ணிக்
கோவையும்வடமுநாணுங்குழைகளுங்குழையச்சூட்டிப்
பாவையர்பணிமென்கொம்பைநோக்கினர்பரிந்துநிற்பார். (௧௧)

வேறு.

துறும்போதினிற்றேன்றுளைத்துண்டுழறும்பிபிட்டம்
நறுங்கோதையோடேனைசின்னமுழ்த்தநல்லார்
வெறுங்கூந்தன்மொய்க்கின்றனவெண்டவேண்டுபோதும்
உறும்போகமெல்லாநலனுள்வழியுண்பரன்றே. (௧௨)

---

* வாசகம்வல்லார் - வாய்வன்மையுடையார் † ஓரறிவுயிரேதாழின் ஆறறிவுயிர்தாழ்வது கூறாதேயமைந்ததென்க. ‡ வாளரிமருளுங்கோளர் - கம்பீரநடை, உடல்வலி, சமர்க்கஞ்சாத் தறுகண்மை யென்றின்னவற்றை. § நதியினுங்குலத்தும் பூவாளினங்கள் - முகத்தாமரைகள். § உலம்-திரண்டகல்.

மெய்ப்போதினங்கைக்கணியன்னவண்மென்பளிங்கில்
பொய்ப்போதுதாங்கிப்பொலிகின்றதன்மேனிநோக்கி
இப்பாவையெங்கோற்குயிரன்னவளென்னவுன்னிக்
கைப்போதிஞேடுநெடுங்கண்பனிகாரநின்ருள். (கரு)

* கோளுண்டதிங்கண்முகத்தாளொருகொம்பொர்மன்னன்
தோளுண்டமாலையொருதோகையைச்சூட்டநோக்கித்
தாளுண்டகச்சாற்றகையுண்டமுலைக்கணுலி
வாளுண்டகண்ணின்மழையுண்டெனவாரநின்ருள். (கசு)

மயில்போல்வருவாண்மனங்காணியகாதன்மன்னன்
செயிர்தீர்மலர்க்காவிஞெர் † மாதவிச்சூழல்சேரப்
பயில்வாளிறைபண்டுபிறிந்தறியாள்பதைத்தாள்
உயிர்நாடியொல்கும்முடல்போலலமந்துழன்ருள். (கஎ)

மைதாழ்கருங்கண்கள்சிவப்புறவந்துதோன்ற
நெய்தாவும்வேலாஞெடுநெஞ்சுபுலந்துநின்ருள்
எய்தாதுநின்றமலர்நோக்கியெனக்கிதீண்டக்
கொய்தீதியென்ருேர்குயிலைக்கரங்கூப்புகின்ருள். (கஅ)

செம்மாந்ததெங்கின்னிளநீரையொர்செம்மஞேக்கி
அம்மாவிவைமங்கையர்கொங்கைகளாகுமென்ன
எம்மாதர்கொங்கைக்கிவையொப்பனவென்றுேரேழை
விம்மாவெதும்பாவெயராமுகம்வெய்துயிர்த்தாள். (கஎ)

போரென்னவீங்கும்பொருப்பன்னபொலங்கொடிண்டோள்
மாரன்னனையான்மலர்கொய்திருந்தானைவந்தோர்
காரன்னகூந்தற்குயிலன்னவள்கண்புதைப்ப
‡ ஆரென்னலோடும்மனலென்னவயிர்த்துயிர்த்தாள். (கஅ)

ஊற்றூர்நறைநாண்மலர் § மாதரொருங்குவாசச்
சேற்றூல்விளையாதசெந்தாமரைக்கைகணீட்டி
எற்றூர்க்குதவானிடையேந்தினனின்றெழுந்தான்
மாற்றூனுதவான்கடு § வச்சையன்போலொர்மன்னன். (கக)

தைக்கின்றவேஞேக்கினடன்னுயிரன்னமன்னன்
மைக்கொண்டகண்ணுளெதிர்மாற்றவள்பேர்விளம்ப

---

* கோளுண்ட திங்கள்—இராகுவினுற் பீடிக்கப்பட்ட சந்திரன். † மாதவிசூழல்-வசந்தமல்லிகைக்கொடிவீடு. இதனை வடநூலார் லதாக்ருஹம் என்பர். ‡ ஆரென்றவன் வினவலான் நம்மைப் போலிவன் மாட்டுவிளையாட்டு: மகளிர்பலருளரென்பது-கருதினுளென்பது. § பன்மாதரொன்றுது-மாதரென்றது இருவரை. § வச்சையன்-லோபி.

மெய்க்கொண்டநாணைத்தலைக்கொண்டிடவிம்மமென்பூக்
கைக்கொண்டுமோர்தாளுயிர்ப்புண்ணெரிந்தவன்றே. (உ0)

திண்டேரரசன்னொருவன்குலத்தேவிமார்தம்
ஒண்டாமரைவாண்முகத்துண்டளி * ருண்கணெல்லாம்
கண்டாதரிக்கத்திரிவான்மதங்கௌவியுண்ண
வண்டாதரிக்கத்திரிமாமதவாளையொத்தான். (உக)

சந்திக்கலாவெண்மதி † வாணுதலாடனக்கும்
வந்திக்கலாகுமடவாட்கும்வகுத்தளிக்கி
சிந்திக்கலாகாவுருவத்தினனின்றபோதும்
சிந்திக்கலாபமயிற்கண்கள்சிவந்துபோனர். (உஉ)

வேறு.

வந்தெங்குந்தம்மன்னுயிரேயோபிறிதொன்றோ
கந்தந்துன்றுஞ்சோர்குழல்காணார்கலைபேணார்
‡ அந்தத்தோறுமற்றதுகுழுத்தமைவபாரார்
சிந்துஞ்சந்தத்தேமலர்நாடித்திரிவாரும். (உங)

யாழொழாக்குஞ்சொற் § பொன்னனையாளோரிசன்மன்னன்
தாழத்தாழாடாழ்ந்தமனத்தாடளர்கின்றாள்
ஆழத்துள்ளுங்கள்ளரினைப்பானவனின்ற
சூழற்கேதன்கிள்ளையையேவித்தொடர்வாளும். (உச)

அந்தாராகத் § தைங்கணைதானுயிராகச்
சிந்தாகின்றசிந்தையினன்செய்குவதோரான்
மந்தாரங்கொண்டகுதியோமாதவியென்றோர்
சந்தார்கொங்கைத்தார்குழலாள்பார்த்தனர்வாளும். (உரு)

நாடிக்கொண்டாள்குற்றமயர்தான்முனிவார்முன்
ஊடிக்காணக்காட்டுநலத்தாளுடனில்லாள்
தேடித்தேடிச்செய்தசெழும்பூநறுமாலை
சூடிச்சூடிக்கண்ணடிநோக்கித்துவள்வாளும். (உசா)

¶ மறலிக்கூறும்வன்கதிர்வேலானிடைமேவத்
துறவிக்கோலம்பெற்றிலனென்றேலுடன்வாழ்விப்

---

* உண்கள்-மையுண்டகண். இதனை 'திருநோக்கிய ளுண்கண்' என்பதனானறிக. † சந்திக்கலாவெண்மதி-மாலைப்பொழுதிற் றோன்றுங்கலைகளோடு தோன்றுமதி.

‡ அந்தமென்றது கடைப்பூட்கை. § பொன்னனையாள்-திருமகளொப்பாள்.

¶ ஐங்கணை மா, தாமரை, நெய்தல், அசோகு, முல்லை.

§ எவ்வகைவினையையேனும் தன் கைப்படையேயல்லது வேறு துணைவேண்டாது முட்டின்றி முடிக்கு மாற்றலுடையானென்பார் 'மறலிக்கூறும் வன்கதிர்வேலா' னென்றாரென்க.

பிறவிக்கொல்லேனென்செய்வதிப்பேரணியென்றோர்
விறலிக்கீவாளொத்திழையெல்லாம்விடுவாளும். (உஎ)

* வம்பிற்பொங்குங்கொங்கைசுமக்கும்வலியின்றிக்
கம்பிக்குந்தந் நுண்ணிடைநோவக்கசிவாரும்
பைம்பொற்கிண்ணம்மெல்விரலுங்கிப்பயில்கின்ற
கொம்பிற்பிள்ளைக்கிள்ளையொளிக்கச்குழைவாரும். (உஅ)

தன்னைக்கண்டாண்மென்னடைகண்டாடமர்போலத்
துன்னக்கண்டாடோழமைகண்டாடுணையென்றாள்
உன்னைக்கண்டாரெள்ளுவர்பொல்லாதுநீயென்
றன்னக்கன்னிக்காடையளிப்பானமைவாரும். (உகூ)

பாகொக்குஞ்சொன்னுண்கலையாடன்படரல்குல்
ஆகக்கண்டோராடரவாமென்றயனண்ணும்
தோகைக்கஞ்சிக்கொம்பிறைதுங்கித்துணரீன்ற
சாகைத்தங்கைக்கண்கள் † புதைத்தேதளர்வாரும். (௩0)

பொன்னேதேனேபூமகளேகாணெனையென்றுத்
தன்னேரில்லாளங்கொருகொய்யற்றழைமூழ்கி
இன்னேயென்னைக்காணுதிநீயென்றிகலித்தன்
ஈன் ‡ னீலக்கண்கையின்மறைத்துக்குவாரும். (௩க)

வில்விற்கோதைகாணுறமிக்கோரிலவங்கம்
புல்லிக்கொண்டதாமரைமென்பூமலர்தாங்கி
அல்விற்கோதைமாதர்முகப்போரவிந்தச்
செல்வக்காணிற்செங்கதிரென்னத்திரிவாரும். (௩உ)

செய்யிற்கொய்யுஞ்செங்குமுதஞ்செஞ்சிலையொன்றும்
கய்யிற்பெய்யுங்காமனுநாணுங்கவினூர்தம்
மையற்பேதைமாதர்பிழற்றும்மழலைச்சொல்
தெய்வப்பாடல்சொற்கலையென்னத்தெரிவாரும். (௩௩)

சோலைத்தும்பிமென்குழலாகத்தொடைமேவும்
கோலைக்கொண்டமன்மதவாயன்குறியுய்ப்ப
நீலத்துண்கண்மங்கையர்சூழ்நிரையாவின்
மாலைப்போதின்மால்விடையென்னவருவாரும். (௩௪)

வேறு.

§ ஊக்கமுள்ளத்துடையமுனிவரால்
காக்கலாவதுகாமன்கைவில்லெனும்

* சச்சினின்று மடங்காதுபுறத்தே தோன்றுவதாகலின் வம்பிற் பொங்கும் கொங்கையென்றார். † புதைத்துத்தளர்வாரென்றதை முன் பின்னாகநிறுத்தி விகுதிபிரித்துக்கூட்டியுரைக்க. ‡ நீலமென்றது-ஆகு பெயர். § ஊக்கமென்றது-தாம்விடுத்த காமநுகர்ச்சியிற் றளராதிருக்கு நிலைமையை,

வாக்குமாத்திரமல்லதுவவ்வியிர்
பூக்கொய்வான்புருவக்கடைபோதுமே. (கரு)

நாறுபூங்குழ * னன்னுதல்பன்னமேல்
எறிஞன்மனத்தும்பர்சென்றேறிஞன்
ஊறுஞானத்துயர்ந்தவராயினும்
வீறுசேர்முலைமாதரைவெல்வரோ. (கசு)

சினையின்மேலிருந்தாளுருந்தோகைமால்
வினையமும்மரியாள்வனப்பின்றலை
நினைவுநோக்கமுந்தலன்னகைகளால்
நனையுநாண்முறிபுங்கொய்துகல்கிஞன். (கஎ)

வண்டுவாழ்குழலாண்முகநோக்கியோர்
† தண்டுபோர்புயத்தான்றமோதிஞன்
உண்டுகோபமென்றனத்துணர்ந்தவள்
தொண்டைவாயிற்றகைப்பொன்றுசொல்லவே. (கஅ)

எயுந்தன்மையரிவ்வகையாரெலாம்
தூயதண்ணிழற்சோலைத்துறமலர்
வேயுஞ்செய்கைவெறுத்தனர்வெண்டிரை
பாயுந்தீம்புனற்பண்ணைசென்றெய்தினர். (கக)

கசு-வது, பூக்கொய்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கoசச.

## கசா-வது, நீர்விளையாட்டுப்படலம்.

நீர்விளையாட்டைக் குறித்துச்சொல்லும் படலம்.

புனைமலர்த்தடங்களுேக்கிப்பூசல்வண்டார்த்துப்பொங்க
‡ வினையறுதுறக்கநாட்டுவிண்ணவர்கணம்போனா
அனகருமணங்கஞருமம்மலர்ச்சோலைநின்று
வனகரிபிடிகளோடும்வருவனபோலவந்தார். (க)

அங்கவர்பண்ணைநன்னீர்நடுவாவைக்தவேந்தர்...
§ கங்கைவார்சடையோனன்னமாமுனிகளைவேளுேன்

* நன்னுதன்மனத்தும்பர் சென்றேறுதலென்றது தலைவிபால்வை
த்த வேட்கைப்பெருங்கடங்காது சுவமேயேறுதலை. † தண்டுபோர்
புயத்தானென்பதனன் வழியதோரானெனப்போதரலால் தன்றோள்
மாலையையொருத்திக்குச்சூட்டிவந்தானென்றுமிகுனெனக. ‡ தீவினை
யிழந்தா ரெய்துதற்கிடனுகலின்வினையறுதுறக்கமென்றார். § கங்கை
வார் சடையோனன்ன மாமுனியென்றது வசிட்டனை.

மங்கையர்கூட்டத்தோடும்வானவர்க்கிறைவன்செல்வம்
பொங்குபாற்கடலிற்செல்லுந்தோற்றமேபோன்றதன்றே. (௨)

மையவாங்குவளையெல்லாமாதர்கண்மலர்கள்பூத்த
* கையவாமுருவத்தார்தங்கண்மலர்குவளைபூத்த
செய்யதாமரைகளெல்லாந்தெரிவையர்முகங்கள்பூத்த
தையலார்முகங்கள்செய்யதாமரைபூத்தவன்றே. (௩)

தாளையேய்கமலத்தாளின்மார்புறத்தழுவுவாரும்
† தோளையேபற்றிவெற்றித்திருவெனத்தோன்றுவாரும்
பாளையேவிரிந்ததென்னப்பரந்துநீருந்துவாரும்
வாளைமீனுகளவஞ்சிமைந்தரைத்தழுவுவாரும். (௪)

வண்டுணக்கமழுஞ்சுண்ணம்வாசநெய்நானத்தோடும்
கொண்டெதிர்வீசுவாருங்கோதைகொண்டோச்சுவாரும்
தொண்டைவாய்ப்பெய்துநீர்கொழுநர்மேற்றூகின்றாரும்
புண்டரீகக்கைகூப்பிப்புனன்முகத்திறைக்கின்றாரும். (௫)

‡ மின்னொத்தவிடையினாரும்வேயொத்ததோளினாரும்
சின்னத்தினளகபந்திதிருமுகமறைப்பநீக்கி
அன்னத்தைவருதியென்னோடாடவென்றழைக்கின்றாரும்
பொன்னொத்தமுலையின்வந்துபூவொத்தவுளைகின்றாரும். (௬)

பண்ணுளபவளத்தொண்டைபங்கயம்பூத்ததன்ன
வண்ணவாய்க்குவளைவாட்கண்மருங்கிலாக்கரும்பினன்னார்
உண்ணிறைகயலைநோக்கியோடுநீர்த்தடங்கட்கெல்லாம்
கண்ணுளவாங்கொலென்றுகணவரைவினவுவாரும். (௭)

தேனகுநறவமாலைச்செறிகுழற்றெய்வமன்னார்
தானுடைக்கோலமேனிதடத்திடைத்தோன்றநோக்கி
நானகநகுகின்றாளிந்நன்னுதறோழியாமென்
றானதில்விலையினாமுளங்குளிர்ந்துதவுவாரும். (௮)

குண்டலத்திருவில்வீசக்குலமணியாரமின்ன
விண்டொடர்வரையின்வைகுமென்மயிற்கணங்கள்போல
வண்டுளர்கோதைமாதர்மைந்தர்தம்வயிரத்திண்டோட்
டண்டுகள்தழுவுமாசைபுனற்கரைசார்கின்றாரும். (௯)

---

* சாமுத்திரிகைநூலி னெழுங்கென்பது படக்கையென்றார். †வெற்றித்திருவென்றமையான் தோளென்றது-ஆடவர்தோளை விளக்கிநின்றது. ‡ அம்மாதராருடைய உறுப்பிடை யொவ்வொன்றுமே காண்பாருடைய மனங்கண்களை யொருசேரக்கவரும் வனப்பிற்றாகலின் அவ்வாறு தம்மை அவர்பாற்செலக் கணவர் அவ்வவ்வமையத்து அவ்வவ் வுறுப்பேகாரணமாக அவர்க்கிட்டு மின்னொத்தவிடையினாள் வேயொத்த தோளினாள் என கூறுங்கூற்றினைத் தாம்கொண்டு கூறினாரல்லது இடையொன்றுமே சிறந்தார் தோளொன்றுமே சிறந்தாரென இருவகையராகக் கூறினாரல்லர்.

அங்கிடையுற்றகுற்றம்யாவதென்றறிதனேற்றும்
செங்கயலனையநாட்டத்திவப்புறச்சிறப்போன
மங்கையோர்கமலத்துன்மறைந்தனண்மறையவைத்தன்
பங்கயமுகமென்றோராதையுற்றப்பார்க்கின்றனள். (௪௦)

பொற்றொடிதளிர்க்கைச்சங்கம்வண்டொடுபுலம்பியார்ப்ப
சுற்றுநீர்குடையுந்தோறுமேந்துபோல்குனின்றும்
கற்றைமேகலைகணீங்கிச்சீறடிசெனவக்காலில்
சுற்றியாகமென்றதுணுக்கத்தாற்றடுக்கின்றாரும். (௪௧)

குடைந்துநீராடுமாதர்குழாம்புடைசூழவாழித்
தடம்புயம்பொலியவாண்டோர்தார்செழுவேந்தனின்றான்
கடைந்தநாளமிழ்திறேடுக்கடலிடைவந்துதோன்றும்
மடந்தையர்சூழ்நின்றமந்தரம்போலமாதோ. (௪௨)

தொடியுலாங்கமலச்செங்கைத்தாரகைத்துவர்த்தசெவ்வாய்க்
கொடியுலாமருங்குனல்லார்சூழத்தொருகுரிசினின்றான்
கடியுலாங்கமலவேலிக்கண்ணகன்கானியாற்றுப்
பிடியெலாஞ்சூழ்ந்துநின்றபெய்மதயானையொத்தான். (௪௩)

கானமாமயில்களெல்லாங்களிகெடக்கலிக்குஞ்சாயல்
* சோனைவார்குழலினார்தங்குழாத்தொருதோன்றனின்றான்
வானயாறதனைநண்ணிவயின்வயின்வயங்கித்தோன்றும்
மீனெலாஞ்சூழ்நின்றவிரிகதிர்த்திங்களொத்தான். (௪௪)

மேவலார்த்தகைமைத்தல்லால் † வேழவிற்றடக்கைவீரற்
கேவெலாங்காட்டுகின்றவிணைநெடுங்கண்ணோரோடு
பாவைமார்பயந்தகோலப்பண்ணையிற்பொலிவான்வண்ணப்
பூவெலாமலர்ந்தபொய்கைதாமரைபொலிவதொத்தான். (௪௫)

மிடலுடைக்கொடியவேலேயென்னவாண்மைக்கவினென்னச்
சுடர்முகத்துலவுகண்ணாரோடோதையர்சூழநின்றான்
மடலுடைப்போதுகாட்டுமலர்கொடிபலவுஞ்சூழ்ந்த
கடலிடைத்தோன்றுமென் ‡ பூங்கற்பகவல்லியொத்தான். (௪௬)

தேரிடைக்கொண்டவல்குற்றேர்க்கிடைக்கொண்டகொங்கை
ஆரிடைச்சென்றங்கொள்ளக்கொண்கனைவந்துகொண்டார்
வாரிடைத்தனமீதாடமூழ்கினான்வந்தவைத்தீர்
நீரிடைத்தோன்றுந்திங்கணிழலெனப்பொலிந்தனன்றே. (௪௭)

---

* சோனைமழைபோலிடையறாது வார்ந்துதொங்குதலான் சோனைவார்குழலினரென்றார்.

† வேழவிற்றடக்கைவீரன்-கரும்புவில்லையுடைய மன்மதன்.

‡ கற்பகவல்லி-கற்பகத்தின்மேற்படரும் காமவல்லி.

வேறு.

மலைகடந்தபுயங்கண்மடந்தைமார்
கலைகடந்தகலல்குல்கடாம்பட
முலைகடந்தமின்முந்திநெருங்கலால்
நிலைகடந்துபரந்ததுநீத்தமே. (கஅ)

* செய்யவாய்வெளுப்பக்கண்சிவப்புற
நெய்யராகமழியத்துகினெகத்
தொய்யின்மாமுலைமங்கையர்தோய்தலால்
பொய்கைகாதற்கொழுநரும்போன்றதே. (க௯)

ஆனதூயவரோடாடினர்
ஞானநீரவராகுதனன்றரோ
தேனுநாவியுந்தேக்ககிலாவியும்
மீனுநாறினவேறினிவேண்டுமோ. (உ௦)

மிக்கவேந்தர்தம்மெய்யழிசாந்தொடும்
புக்கமங்கையர்குங்குமம்போர்த்தலால்
ஒக்கநீலமுகிற்றலையோடிய
செக்கர்வானகமொத்ததத்தீம்புனல். (உக)

காகதுண்டநறுங்கலவைக்களி
ஆகமுண்டதடங்கணுநீங்கலால்
பாகடர்ந்தபணிக்கணிவாய்ச்சியர்
† வேகடஞ்செய்மணியெனமின்னினார். (உஉ)

பாயரித்திறலான் ‡ பசுஞ்சாந்தினால்
ஆயபொற்புயத்துப்பொதிதூக்குறி
மீயரித்துவெளுக்கவொர்மெல்லியல்
சேயரிக்கருங்கண்கள்சிவந்தவே. (உ௩)

§ கதம்பநாள்விரைகள்ளவிழ்ந்தாதொடும்
ததும்புந்திரைத்தண்புனல்சுட்டதால்
நிதம்பபாரத்தொர்நேரிழைகாமத்தால்
வெதும்புவாளுடல்வெப்பம்வெதுப்பவே. (உச)

தையலாளையொர்தாரணிதோளினான்
நெய்கொளோதியினீர்முகந்தேற்றினான்

---

* வாய்வெளுத்தலுங் கண்சிவத்தலு மாதரைத் தோய்வதனா லுண்டாவது.

† வேகடஞ்செயல்-சாணைபிடித்தல். அன்றி அழுக்கற்றுதல் எனினுமமையும்.

‡ பசுமை வெண்மையென்னும் பண்புகள் வண்ணப்பண்பினை யுணர்த்தாது முறையே ஈரமுமின்மையு முணர்த்திநின்றன.

§ கதம்பம்-பரிமளப்பொடி.

# கஎ-வது, உண்டாட்டுப்படலம்.

உண்டாடலைக்குறித்துச் சொல்லும் படலம்.

வெண்ணிறநறைநிறைவெள்ளமென்னவும்
பண்ணிறஞ்செறிந்திடைபரந்ததென்னவும்
உண்ணிறைகாமமிக்கொழுகிற்றென்னவும்
தண்ணிறைநெடுநிலாத்தழைத்ததெங்குமே. (௧)

கலந்தவர்க்கினியதோர்கள்ளுமாய்ப்பிரிந்
துலந்தவர்க்குயிர்சுடுவிடமுமாயுடன்
புலந்தவர்க்குதவிசெய்புதியதூதுமாய்
மலர்ந்ததுநெடுநிலாமதனன்வேண்டவே. (௨)

ஆறெலாங்கங்கையேயாயவாழிதாம்
கூறுபாற்கடலையேயொத்தகுன்றெலாம்
* ஈறிலான்கயிலையையியைந்தவெண்ணினி
வேறியாம்புகல்வதுநிலவின்வீக்கமே. (௩)

எள்ளருந்திசைகளோடி † யாரும்யாவையும்
கொள்ளைவெண்ணிலவினாற்கோலங்கோடலால்
வள்ளுறைவயிரவாண் ‡ மகரகேதனன்
வெள்ளணியொத்ததுவேலைஞாலமே. (௪)

தயங்குதாரகைபுரைதரளநீழலும்
இயங்குதார்மிடைந்தகாரெழினிச்சூழலும்
கயங்கள்போன்றொளிர் § பளிங்கடுத்தகானமும்
வயங்குபூம்பந்தருமகளிரெய்தினார். (௫)

பூக்கமழோதியர்போதுபோக்கிய
சேக்கை $ யின்பச்செருச்செருக்குஞ்சிந்தையார்
ஆக்கியவமிழ்தெனவம்பொன்வள்ளத்து
வாக்கியபசுநறுமாந்தன்மேயினார். (௬)

மீனுடைவானுடைவிஞ்சைநாட்டவர்
ஊனுடையுடம்பினுருவமொப்பிலார்
மானுடைநோக்கினார்வாயின்மாந்தினார்
தேனுடைமலரிடைத்தேன்பெய்தென்னவே. (௭)

---

* ஈறிலான் - சங்காரகாரணனாகியசிவன், இதற்குவேறுகூறுவாருமுளர். † யாரும்யாவையும் என்றது-இயங்குதிணைநிலைத்திணைகளை. ‡ மகரகேதனன் - கயற்கொடியையுடைய மன்மதன். § பளிங்கடுத்த கானமென்றது - பளிங்குப்பாறையை. $ இன்பச்செருநர்-கலவிப்போர்.

பொழிகின்றபூவின்வேய்ந்தபந்தரைப்புரைத்துக்கீழ்வந்
திழிகின்றகொழுநிலாவைவநறவெனவள்ளத்தேற்றாள். (கரு)

மின்னெனநுடங்குகின்றமருங்குலாளொருத்திவெள்ளை
இன்னமிழ்துணையதீஞ்சொலிடைதடுமாறியென்ன
வன்னமேகலையைநீக்கிமலர்த்தொடை * யல்குல்சூழ்ந்தாள்
பொன்னரிமாலைகொண்டுபுரிகுழல்புனையலுற்றாள். (கசு)

கண்மணிவள்ளத்துள்ளேகளிக்குந்தன்முகத்தைநோக்கி
விண்மதிமதுவினுளைவீழ்ந்ததென்றொருத்தியுன்னி
உண்மகிழ்துணைவனோடுமூடுநாள்வெம்மைநீக்கித்
தண்மதியாகில்யானுந்தருவெனிந்நறவையென்றாள். (கஎ)

எள்ளொத்தகோலமூக்கினேந்திழையொருத்திமுன்கை
தள்ளத்தண்ணறவையெல்லாந்தவிசிடையுகுத்துந்தேறாள்
உள்ளத்தின்மயக்கந்தன்னுலுட்புறத்துண்டென்றெண்ணி
வள்ளத்தைமறித்துவாங்கிமணிநிறவிதழின்வைத்தாள். (கஅ)

வான்றனைப்பிரிதலாற்றுவண்டினம் † வச்சைமாக்கள்
என்றவர்நிதியம்வேட்டவிரவலரென்னவார்ப்பத்
தேன்றருகமலச்செவ்வாய்திறந்தனளுகரநாணி
ஊன்றியகழுநீர்நாளத்தாளினுலொருத்தியுண்டாள். (ககூ)

புள்ளுறைகமலவாவிப்பொருகயல்வெருவியோட
வள்ளுறைகழித்தவாள்போல்வரியுறவயங்குகண்ணாள்
கள்ளுறைமலர்மென்கூந்தற்களியிளமஞ்ஞையன்னாள்
‡ உள்ளுறையன்பனுண்ணுனெனநறவுண்ணலெண்ணாள். (உ0)

வேறு.

கூற்றுறழ்நயனங்கள்சிவப்பக்கூனுதல்
ஏற்றிவாளெயிறுகளதுக்கியின்றளிர்
மாற்றருங்கரதலமறிக்குமாதொரு
§ சீற்றமாமபிநயந்தெரிக்கின்றாரினே. (உக)

துடித்தவான்றுவரிதழ்த்தொண்டைத்தூநிலா
கடித்தவாலெயிறுகளதுக்கிக்கண்களால்
வடித்தவெங்குருதிவேல்விழிக்குமாதர்மெய்
பொடித்தவேர்புறத்துகுநறவம்போன்றவே. (உஉ)

* அல்குல் சூழ்ந்தாள் எனப்பின்வருதலான் மேகலை என்ற தாடையினை. † வச்சைமாக்கள்-உலோபிகள்.

‡ தன்னுள்ளத்து நீங்காதுறைதலின் உள்ளுறையன்பனென்றார்.

§ சீற்றமாமபிநயமெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

* கனித்திரளிதழ்ப்பொழிசெம்மைகண்பட
நினைப்பதொன்றுரைப்பதொன்றுமோர்சேர்தரு
தனிச்சுடர்தாமரைமுகத்துச்சாபமும்
குனித்ததுபனித்ததுகுழவித்திங்களே. (௨௩)

இலவிதழ்த்துவர்விடவெயிற்றேனுக
முலையிசைக்கச்சொடுநிலைபழுட்டற
அலைகுழல்சோர்தரவசதியாட்டலாற்
கலவிசெய்கொழுநருக்கன்றெனொத்ததே. (௨௪)

† கனைகடற்கன்வனற்கலக்கமுற்றதை
‡ அனகனுக்கறிவியென்றறியப்போக்குமோர்
இனமணிக்கலையினொடோழிநீயுமென்
மனமெனத்தாழ்திபோவருதியோவென்றான். (௨௫)

மானமர்நோக்கியோர்மதுரைவேந்தன்பால்
ஆனதன்பாங்கியராயினரெலாம்
§ போனவர்போனவர்தொடரப்போக்கினான்
தானுமங்கவர்பினேதமியனேகினான். (௨௬)

விரைசெய்பூஞ்சேக்கையினிருத்த § நீடிசைக்
கரைசெயாவாசையங்கடலுளாவொரு
பிரைசமென்குதலையான்கொழுநன்பேரெலாம்
உரைசெயுங்கிள்ளையையுவந்துபுல்லினாள். (௨௭)

மன்றனொன்றொருசிறையிருந்தொர்காணுதல்
தன்றுணைக்கிள்ளையைத்தழீஇயென்றவிவை
இன்றுபோய்க்கொணர்கிலையென்செய்வாயெனக்
கன்றிலோவொடாத்தியென்றழுதுசீறினாள். (௨௮)

வளைபயின்முன்கையோர்மயிலனாடனக்
கிளையவள்பெயரினைக்கொழுநன்றனும்
முளையெயிறிலங்கிடமுறுவல்வந்தது
கனகனையதிர்த்ததுகயற்கணாளியே. (௨௯)

செற்றமுன்புரிந்தோர்செம்மல்வெம்மையாற்
பற்றலுமல்குலிற்பார்த்தமேகலை
அற்றகுழத்தின்முன்னவனிசேர்ந்தன
பொற்றொடியொருத்திகண்பொழிதமுத்தமே. (௩௦)

---

* கனிபொழி என்புழி வினைப்பகுதியே வினையெச்சப்பொருட்டது. வரிப்புனைபந்தென்புழிப்போல். † கனைகடல்-ஒலிகடல். ‡ யான்சீயே னென்பான் எதிர்மறைமுகத்தான் அவனை அனகனென்றான். § போனவர்போனவர்-முற்போனவரையும் பிற்போனவரையு முணர்த்திற்று.

§ நீடிசை ஒருபொருட்பன்மொழி.

தோடவிழ்கூந்தலாளொருத்திதோன்றலோ
டூடுகென்றேனுயிருருகுநோய்கெடக்
கூடுகென்றேனவன்குணங்கள்வீணையிற்
பாடுகென்றேனெனப்பலவும்பன்னினாள். (௩௧)

மாடகம்பற்றினண்மகரவீணைதன்
தோடவிழ்மலர்க்கரஞ்சிவப்பத்தொட்டனள்
பாடினளொருத்திதன்பாங்குளார்களோ
டூடினதுரைசெயாளுள்ளத்துள்ளதே. (௩௨)

குழைந்தபூங்கொம்பனாளொருத்திகூடலை
இழைத்தனளவ்வவளிட்டபோதெலாம்
பிழைத்தலுமனங்கவேள்பிழைப்பிலம்பொடும்
உழைத்தனளுயிர்த்தனளுயிருண்டென்னவே. (௩௩)

பந்தணிவிரலினாளொருத்திபையுளாள்
சுந்தரனொருவன்பாற்றூதுபோக்கினாள்
வந்தனனெனக்கடையடைத்துமாற்றினாள்
சிந்தனைதெரிந்திலஞ்சிவந்தநாட்டமே. (௩௪)

உய்த்தபூம்பள்ளியினூடனீங்குவான்
சித்தமுண்டொருத்திக்கதன்பன்றேர்கிலான்
பொய்த்ததோர் * மூரியானிமிர்ந்துபோக்குவாள்
எத்தனையிறந்தனகடிகைமீண்டென்றாள். (௩௫)

விதைத்தமென்காதலின்வித்துமெய்ந்நிறை
இதைப்புனனனைத்திடமுளைத்தவேயெனப்
பதைத்தனளொருத்தன்மேலொருத்தி † பஞ்சடி
உதைத்தலும்பொடித்தனவுரோமராசியே. (௩௬)

பொலிந்தவாண்முகத்தினான்பொங்கித்தன்னையும்
மலிந்தபேருவகையான்மாற்றுவேந்தரை
நலிந்தவாளுழவனோர்நங்கைகொங்கைபோய்
மெலிந்தவாநோக்கித்தன்புயங்கள்வீங்கினான். (௩௭)

எய்ந்தபேரெழிலினானொருவனெய்தினான்
வேய்ந்தபோலெங்கணுமனங்கன்வெங்கணை
பாய்ந்தபூம்பள்ளியிற்படுத்தபல்லவந்
தீய்ந்தனநோக்கினன்றிசைக்குஞ்சிந்தையான். (௩௮)

ஊட்டியசாந்துவெந்துலரும்வெம்மையான்
நாட்டினையளித்திநீயென்றுநல்லவர்

---

* மூரி-உறக்கம்.

† பஞ்சடி-செம்பஞ்சூட்டியதாள்.

ஆட்டுநீர்க்கலசமேயென்னலானவோர்
வாட்டொழின்மைந்தற்கோர்மங்கைகொங்கையே. (௩௯)

பயிருறுகிண்கிணிபாதமேகலை
வயிரவான்பூணணிவாங்கிநீக்கினாள்
உயிருறுதலைவன்பாற்போகவுன்னினாள்
* செயிருறுதிங்களைத்தீயநோக்கினாள். (௪௰)

எழுமில்வன்மையையென்னென்றுன்னுதும்
† ஆலைமென்கரும்பனாளொருவற்காங்கொரு
சோலைமென்குயிலனாள்சுற்றிவீக்கிய
மாலையைநீக்கிலவயிரத்தோள்களே. (௪௧)

சோர்குழலொருத்திதன்வருத்தஞ்சொல்லுவான்
மாரனைநோக்கியோர்மாதைநோக்கினாள்
காரிகையிவளவன்கருத்தைநோக்கியோர்
வேரியந்தெரியலான்வீடுநோக்கினாள். (௪௨)

சினங்கெழுவாட்கையோர்செம்மல்பாலொரு
கனங்குழைமயிலனாள்கடிதுபோயினாள்
மனங்குழைநறவமோமாலைதான்கொலோ
அனங்கனோயார்கொலோவழைத்ததூதரே. (௪௩)

தொகுதருகாதற்குத் ‡ தோற்றசீற்றத்தோர்
வகிர்மதிநெற்றியாண்மழைக்கணாளிவர்
துகுதலுமுற்றதென்னென்றுகொற்றவன்
நகுதலுநக்கனாணுநீங்கினாள். (௪௪)

பொய்த்தலைமருங்குலாளொருத்திபுல்லிய
கைத்தலநீக்கினள்கருத்தினீக்கலள்
சித்திரம்போன்றவச்செயலோர்தோன்றற்குச்
சத்திரமார்பிடைத்தைத்ததொத்ததே. (௪௫)

மெல்லியலொருத்திதான்விரும்புஞ்சேடியைப்
புல்லியகையினள்போதிதூதெனச்
சொல்லுவானுறுமுறைநாணுஞ்சொல்லலள்
§ எல்லையில்பொழுதெலாமிருந்துவிட்டனள். (௪௬)

---

* நீதோன்றித் தலைவன்பாற் காமவேட்கையுண்டாக்கப் பிறந்தபடி வண்ணம் செல்வேனை நிலாவெரித்துத்தடுத்தது. இதுநீர்த்துத்தகவேதென்பாள் செயிருறுதிங்களைத்தீயநோக்கினாளென்றார். † பிரிந்துநின்ற காம வெப்பத்தாளுந்தமையின் ஆலைமென்கரும்பனாளென்றும், அவன்பட்ட காமவிடாயை யொருவண்ணந் தணிப்பெற்றது இவள்சொல்லேயென் றதுகருதிச் சோலைமென் குயிலனாளென்றுங் கூறினார்.

‡ ஆற்றருப்பைக ளொன்றாற்போலத்தோற்ற சீற்றமென்புழிக் காலங்காட்டு மின்னிடைநிலை புணர்ந்துகெட்டது.

§ பன்முறையாற்றிய செய்கையி னெல்லையில்லாமையை அச்செய்கைநிகழ்ந்த பொழுதின்மேலேற்றி எல்லையில் பொழுதெலாமென்றார்.

ஊறுபோன்பினாளொருத்திதன்னுயிர்
மாறிலாக்காதலன்செலவைமற்றொரு
நாறுபூங்கோதைபானவிலநாணுவாள்
வேறுவேறுறச்சிலமொழிவிளம்பினாள். (சஎ)

உருத்தெரிதன்மையவுயிருமொன்றுதாம்
அருத்தியுமத்துணையாயநீரினார்
ஒருத்தியுமொருத்தனுமுடம்புமொன்றெனப்
பொருத்துவராமெனப்புல்லினாரரோ. (சஅ)

வெதிர்பொருதோளினாளொருத்திவேந்தன்வந்
தெதிர்தலுந்தன்மனமெழுந்துமுன்செல
மதிமுகங்கதுமெனவணங்கினாளது
புதுமையாதலினவற்கச்சம்பூத்ததே. (சகூ)

துணிவருநலத்தொடுசோர்கின்றாளொரு
குனிவருநுதலிக்குக்கொழுநனின்றியே
தனிவருந்தோழியுந்தாயையொத்தனள்
இனிவருதென்றலுமிரவுமென்னவே. (ரு0)

ஆக்கியகாதலளொருத்தியந்தியில்
தாக்கியதெய்வமுண்டென்னுந்தன்மையள்
நோக்கினணின்றனனுவன்றதோர்கிலள்
போக்கினதினோடுணர்வும்போக்கினள். (ருக)

மறப்பிலள்கொழுநனைவரவுநோக்குவாள்
பிறப்பினோடிறப்பெனப்பெயருஞ்சிந்தையால்
* துறப்பருமுகிலிடைத்தோன்றுமின்னெனப்
புறப்படும்புகுமொருபூத்தகொம்பனாள். (ருஉ)

எழுதருங் † கொங்கைமேலனங்கனெய்தவம்
புழுதவெம்புண்களில்வளைக்கையொற்றினாள்
அழுதனள்சிரித்தனளற்றஞ்சொல்லினாள்
தொழுதனளொருத்தியைத்தூதுவேண்டுவாள். (ருங)

ஆர்த்தியுமுற்றதுமறிஞர்க்கற்றந்தான்
வார்த்தையினுணர்த்துதலரிதன்றேமனம்
வேர்த்தனள்வெதும்பினண்மெலிந்துசாய்ந்தனள்
பார்த்தனளொருத்திதன்பாங்கனாளையே. (ருச)

---

* படமாடத்தைத் துறப்பருமுகிலென்றார்.
† கொங்கையினருமைநோக்கி எழுதருங்கொங்கையென்றார்.

சிலையுருவழிதரச்செறிந்தமார்பிற்றன்
முலையுருவினவெனமுதுகைநோக்கினாள். (சுஉ)

குங்குமமுதிர்ந்தனகோதைசோர்ந்தன
சங்கினமூரன்றனகலையுஞ்சாறின
பொங்கினசிலம்புகள்பூசலிட்டன
மங்கையரிளநலமைந்தருண்ணவே. (சுங)

துனியுறுபுலவியைக்காதல்சூழ்சுடர்
பனியெனத்துடைத்தலும்பதைக்குஞ்சிந்தையாள்
புனையிழையொருமயில்பொய்யுறங்குவாள்
* கனவெனுநலத்தினாற்கணவற்புல்லினாள். (சுச)

வட்டவாண்முகத்தொருமயிலுமன்னனும்
† கிட்டியபோதுடல்கிடக்கப்புல்லினார்
விட்டிலர்கங்குலின்விடிவுகண்டிலர்
ஒட்டியவுடல்பிரிப்புணர்கிலாமையால். (சுரு)

அருங்களிமால்களிறனையவீரர்க்கும்
கருங்குழன்மகளிர்க்குங்கலவிப்பூசலால்
நெருங்கியவனமுலைசுமக்கநேர்கலா
மருங்குல்போற்றேய்ந்ததம்மாலைக்கங்குலே. (சுசு)

கடையுறநன்னெறிகாண்கிலாதவர்க்
கிடையுறுதிருவெனவிந்துநந்தினன்
படர்திரைக்கருங்கடற்பரமன்மார்பிடைச்
‡ சுடர்மணிக்கரசெனவிரவிதோன்றினான். (சுஎ)

கஎ-வது, உண்டாட்டுப்படலம்-முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கககச.

---

* கலவிடைப்பயந்ததுபோற் கணவனைப் புல்லுதற்கேதுவாதல் பற்றி கனவெனுநலமென்றார். † பிரிவானுளதாம் வருத்தத்தினருமை தோன்றக் கிட்டியபோதென்றார். ‡ சுடர்மணிக்கரசென்றது பீதகவாடைப்பிரானார் மார்பிடை மணியாகிய கவுத்துவத்தை.

கொடியுளாளோதனிக்குடையுளாளோகுலப்
படியுளாளோகடற்படையுளாளோபகர்
மடியிலாவரசினுன்மார்புளாளோவளர்
முடியுளாளோதெரிந்துணர்கிலா * முளரியாள். (அ)

வார்முகங்கெழுவுகொங்கையர்கருங்குழலின்வண்
டேர்முழங்கரவமேழிசைமுழங்கரவமே
தேர்முழங்கரவம்வெண்டிரைமுழங்கரவமே
கார்முழங்கரவம்வெங்கரிமுழங்கரவமே. (௯)

சூழுமாகடல்களுந்திடர்படத்துகடவழ்ந்
தேழுபாரகமுழுற்றுளதெனற்கெளிதரோ
ஆழியானுலகளந்தன்றுதாள்சென்றவப்
பூழையூடேபொடித்தப்புறம்போயதே. (க0)

மன்னெடுங்குடைமிடைந்தடையவான்மறைதரத்
துன்னிடுந்நிழல்வழங்கிருடொப்பெளிதரோ
பொன்னிடும்புவியிடும்புனைமணிக்கலனெலாம்
மின்னிடும்வில்லிடும்வெயிலிடுந்நிலவிடும். (கக)

தாவின்மன்னவர்பிரான்வரமுரட்சனகனும்
எவருஞ்சிலையினுனெதிர்வருந்நெறியெலாம்
தூவுதண்சுண்ணமுங்கனகநுண்டுளியும்
பூவின்மென்றாதும்பொடியுமேபொடியெலாம். (கஉ)

நறுவிரைத்தேனுநானமுநறுங்குங்குமச்
செறியகிற்றேய்வையுமான்மதத்தேக்கரும்
வெறியுடைக்கலவையும்விரவுசெஞ்சாந்தமும்
செறிமதக்கலுழிபாய்சேறுமேசேறெலாம். (கங)

மன்றலங்கோதையார்மணியினும்பொன்னினும்
சென்றுவந்துலவுமச்சிதைவிலாநிழலினோர்
வென்றிதிண்கொடியொடுந்நெடுவிதானமும்விராய்
நின்றவெண்குடைகளினிழல்களேநிழலெலாம். (கச)

மாறிலாமதுகையான்மகிழ்பெருந்தானைமேல்
ஊறுபேருவகையானனிகம்வந்துற்றபோ
தீறிலோதையினொடுமெறிதிரைப்பரவைமேல்
ஆறுபாய்கின்றதோரமலைபோலானதே. (கரு)

கந்தையேபொருகரிச்சனகனுங்காதலோ
டுந்தவோதரியதோர்தன்மையோடுலகுளோர்

* முளரியாள்-சயமகள்.

* தந்தையேயனையவத்தாவிறன்முன்புதன்
சிந்தையேபொருவுதேர்செலவிடுத்திறன். (௧௬)

எய்தவத்திருநெடுந்தேரிழிந்தினையதன்
மெய்கொடுஞ்சேனையின்னிற்கமுன்சேறலுங்
கய்யின்வந்தெனக்கடிதினடந்தேறினன்
அய்யனும்முகமலர்ந்தகமுறத்தழுவினன். (௧௭)

தழுவிநின்றவனிருக்கிளையையுந்தமரையுங்
வழுவிலச்சிந்தனையினூடுபரிசையினனைகளாய்
எழுகமுந்துறவெனவிளிதவந்தெய்தினன்
உழுவைமுந்தூரியனுமெனவெதிருமுயிரினன். (௧௮)

இன்னவாறிருவருங்கினியவாதேரவந்
துன்னுமாசகரினின்றெதிர்வரத்துன்னினன்
தன்னையேயனையவன்றுலையேயனையவன்
† பொன்னின்வார்சிலையிறப்பயமிகுந்தருளினன். (௧௯)

தம்பியுந்தானுமத்தானைமன்னவனார்ப்
பம்புதிண்புரவியும்படைநரும்புடைவரச்
செம்பொனின்பசமணித்தேரின்வந்தெய்தினன்
‡ உம்பரும்மிம்பருமுடைகருந்தொடுபுடான். (௨௦)

யானையோவிரதமோவிவுளியோவுடகமோ
ஆனபே § குறையிலாத்தொகையையாரறிகுவார்
தானையோர்சனகனேவலிசெனத்தூரதுமுன்
போனபேரிருவர்தம்படையுரும்படையினே. (௨௧)

காவியுங்குவளையுங்கமழ்கொன் Ş காயாமுமொத்
தோவியஞ்சனைகெடப்பொலிவதோருருவொடே
தேவருந்தொழுகழற்சிறுவன்முன்பரிவதோர்
ஆவிவந்தென்னவந்தரசன்மாடணுகினன். (௨௨)

அனிகம்வந்தடிதொழுக்கமதுசென்றரசர்கோன்
இனியபைக்கழல்பணிந்தெழுதலுந்தழுவினன்
மனுவெனுந்தகையன்மார்பிடைமறைந்தன ¶ மலைத்
தனிநெடுஞ்சிலையிறுத்தவன்றடக்கிரிகளே. (௨௩)

* அனைவோர்க்குந்தெய்வமிலை முதலாப்புள்ளதைபென்பது பற்றித் தந்தையே யனையவத்தாவிறனென்றார்.

† பொன்னின்வார்சிலை-சனகன்வில்.

‡ உம்பர்முதலினர் தொழுவதாமென்றது-இராமனை.

§ உறை என்றது-மிகப்பெரியதோரெண்.

Ş கரியகோலப் பெருந்தகையாதலின் காவியுங்குவளையுங்கமழ்காயாவுமென்றார்.

¶ மலையென்றது-மேருவை, அதுமலைகளுட்சிறந்ததைபற்றி.

இளையபைங்குரிசில்வந்தடிபணிந்தெழுதலும்
தளைவருந்தொடையன்மார்புறவுறத்தழுவினான்
களைவருந்துயரறக்ககனமெண்டிசையெலாம்
* விளைதரும்புகழினானெவரினும்மிகுதியான். (௨௪)

கற்றைவார்சடையினான்கைக்கொளுந்தனுவிறக்
கொற்றநீள்புயநிமிர்த்தருளுமக்குரிசில்பின்
பெற்றதாயரையுமப்பெற்றியிற்றொழுதெழூந்
துற்றபோதவர்மனத்துவகை † யாருரைசெய்வார். (௨௫)

உன்னுபேரன்புமிக்கொழுகியொத்தொண்கணீர்
பன்னுதாரைகடாத்தொழுதெழும்பரதனைப்
பொன்னின்மார்புறவணைத்துயிருறப்புல்லினான்
தன்னையத்தாதைமுன்றழுவினாலென்னவே. (௨௬)

கரியவன்பின்புசென்றவனருங்காதலிற்
பெரியவன்றம்பியென்றினையதோர்பெருமையப்
பொருவருங்குமரர்தம்புனைநறுங்குஞ்சியால்
இருவர்பைங்கழலும்வந்திருவரும்வருடினார். (௨௭)

கோல்வருஞ்செம்மையுங்குடைவருந்தண்மையும்
சால்வருஞ்செல்வமென்றுணர்பெருந்தாதைதன்
மேல்வருந்தன்மையான்மிகவிளங்கினர்கடாம்
‡ நால்வரும்பொருவினான்மறையெனுநடையினார். (௨௮)

சான்றெனத்தகையசெங்கோலினானுயிர்கடாம்
ஈன்றதாற்றாயெனக்கருதுபேரருளினான்
ஆன்றவிச்செல்வத்தினையுமொய்த்தருகுறத்
தோன்றலைக்கொண்டுமுற்செல்கெனச்சொல்லினான். (௨௯)

காதலோவறிகிலங்கரிகளைப்பொருவினார்
§ நீதிலாவுவகையுஞ்சிறிதரோபெரிதரோ
கோதைசூழ்குஞ்சியக்குமரர்வந்தெய்தலும்
தாதை S யாதொத்ததத்தானையின்றன்மையே. (௩0)

தொழுதிரண்டருகுமன்புடையதம்பியர்தொடர்ந்
தழிவில்சித்தையினுகந்தாடன்மாமிசைவரத்

---

* துயரறக் கனமெண்டிசையெலாம் விளைதரும் புகழினானென்றார் சம்பரன்முதலானோரைக் குலத்தோடுங்களைந்தசிறப்புநோக்கி. † யாரென்னும் வினாவினைக்குறிப்பு ஈண்டின்மைகுறித்து நின்றது 'யாஅருலகத் தோர்சொல்லில்லா' வென்புழிப்போல. ‡ நால்வருநடையான் நான்மறை பொருவினவற்றையே உவமைகூறினார்.

§ வினையுவமைபோலாது உயிர்க்குறுதி பயத்தலான் நீதிலாவுவகையென்றார்.

S ஆதலொத்தது என்றது-ஆதொத்ததெனநின்றது.

கண்ணினாற் * காதலென்னும்பொருளையேகாண்கின்றோமிப்
பெண்ணினீர்மையினாலெய்தும்பயனின்றுபெறுதுமென்பார்
மண்ணினீருலர்ந்துவானமழையறவறந்தகாலத்
துண்ணுநீர்கண்டுவீழுமுழைக்குலம்பலவுமொத்தார். (௩)

பள்ளத்துப்பாயுநன்னீரனையவர்பானல்பூத்த
வெள்ளத்துப்பெரியகண்ணார்மென்சிலம்பலம்பமென்பூத்
தள்ளத்தம்மிடைகணோவத்தமைவலித்தவன்பாற்செல்லும்
உள்ளத்தைப்பிடித்துநாமென்றோடுகின்றாருமொத்தார். (௪)

அரத்தமுண்டனையமேனியகலிகைகளித்ததாளும்
விரைக்கருங்குழலிக்காகவில்லிறநிமிர்ந்துவீங்கும்
வரைத்தடந்தோளுங்காணமறுகினின்வீழுமாதர்
இரைத்துவந்தமிழ்தின்மொய்க்குமீயினமென்னலானார். (௫)

வீதிவாய்ச்செல்கின்றான்போல்விழித்திமையாதுநின்ற
மாதரார்கண்களூடேவாவுமான்றேரிற்செல்வான்
யாதினுமுயர்ந்தோர்தன்னையாவர்க்கும் † கண்ணனென்றே
ஓதியபெயர்க்குத்தானேயுறுபொருளுணர்த்திவிட்டான். (௬)

எண்கடந்தலகிலாதின்றேகுறுமிவன்றேரென்று
பெண்கடந்தம்மினொந்துபேதுறுகின்றகாலை
‡ மண்கடந்தமரார்வைகும்வான்கடந்தானைத்தான்றன்
கண்கடவாதுகாத்தகாரிகைபெரியளேகாண். (௭)

பயிரொன்றுகலையுஞ்சங்கும்பழிப்பருநலனும்பண்பும்
செயிரின்றியலர்ந்தபொற்புஞ்சிந்தையுமுணர்வுந்தேசும்
வயிரஞ்செய்பூணுநாணுமடனுந் § தன்னிறையுமற்றும்
உயிரொன்றுமொழியவெல்லாமுகுத்தொருதெரிவைநின்றாள். (௮)

குழையுறுமிளிருங் § கெண்டைகொண்டலினாலிசிந்தத்
தழையுறுக்கரும்பின்சாபத்தனங்கவேள்சரங்கள்பாய
இழையுறுப்புண்ணுறாதவிளமுலையொருத்திசோர்ந்து
மழையுறுமின்னினன்னமருங்குல்போனுடங்கிநின்றாள். (௯)

---

* காதலைப்பொருளென்றார் வைசேடிகர்பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை அறுவகைப்பொருளென்றதனாலென்க. † யாவர் கண்ணிடைச்செல்வனென்றதுபற்றிக் கண்ணனென்றதென்க. ‡ கடவுள் என்னும் பெயர்பற்றி மண்கடந் தமரார்வைகும் வான்கடந்தானென்றார். § உகுத்தெனக் கலைமுதலியன தன்னினீங்கினமை யுணராமை இலக்கணையாற் கூறினார். § இவனையடையத்தவமுடையேனல்லேனெனத் தன்னைநோக்கிக் கவன்றமையான் கெண்டையாலிசிந்தவென்றார்.

